

## திருப்பணியில் அர்ப்பணம் செய்து யூபிலி 25வது ஆண்டு

அருட் தந்தை டன்சன் உலகற சபையின் உலகளாவிய தலைவராக இராண்டாம் முறையும் தெரிவு செய்யப்பட்டார். அருட் தந்தை டன்சன் 1986ம் ஆண்டு இலங்கையில் உலகற சபையில் சேர்ந்து பத்தொன்பது வருடங்களுக்கு முன்பு குருத்துவம் பெற்று 2002ஆம் தொடக்கம் கனடா வந்து கோடைகாலத்தில் பணியாளராக வருகை தந்து பணிபுரிந்தவர் 2011 ஆம் ஆண்டு நடந்த உலகற சபையின் பொது அமர்வில் தலைவாராக தெரிவு செய்யப்பட்டு தொடர்ந்து ஆறு வருடங்களின் பின்பு மீண்டும் நடைபெற்ற பொது அமர்வில் 2016 யூலை மாதாம் 16ம் திகதி தொடக்கம் 21ம் திகதி வரை நடந்த பொது அமர்வில் மீண்டும் உலகற சபையின் தலைவராகச் ஆறு வருடங்களுக்கு தெரிவு செய்யப்பட்டார். இவரது சபை 12ம் பத்திநாதர் பாப்பரசரால் அங்கீகாரம் வழுங்கப்பட்டு 1948ம் ஆண்டு அருட் தந்தை லூயிஸ் மரி பறான் அமதி அவர்களால் ஆரம்பிக்கப்ட்டது. 23 நாடுகளில் இருந்து 400க்கு மேற்பட்ட குருக்களும் 800க்கு மேற்பட்ட பொதுநிலையினரும் பணிபுரிகிறார்கள். அருட் தந்தை இராஜரெட்ணம் அவர்களும். அருட் தந்தை பற்றிக் ஞானப்பிரகாசமும் இச்சபையின் முன்னால் உறுப்பினர்களாக இருந்தார்கள் 2013ம் ஆண்டு தொடக்கம் ஆடிமாதத்தில் கியூபெக் மாநிலத்தில் இருக்கும் தேசிய யாத்திரை ஸ்தலமாகிய அருள் நிறை அன்னையின் ஆலயத்தில் தமிழருக்கென்று ஒரு வருடாந்த யாத்திரை நாளாக தொடங்கியவர் அத்துடன் தனது பாரிய பொறுப்போடு மட்டும் நின்றுவிடாமல் அவ்வப்போது சந்தர்ப்பங்கள் கிடைக்கும் போது எல்லாம் தமிழ் மக்களின் தேவை கருதி தமிழ் மக்களுக்கும் பணி புரிந்து வருகிறார். இவரது பணி உலகம் முழுதும் உள்ள கத்தோலிக்க மக்களின் நன்மைக்காக தொடர்ந்து படர்ந்து வளர இறைவன் இவருடன் துணை நிற்க வேண்டுவதுடன் வாழ்த்துகிறோம். அருட்தந்தையின் பணி சிறக்க பாராட்டுகின்றோம்.



## 50வது வருடம் குருத்துவப்பணி

ஸ்காபறோ பொறின் மிசனின் குருவாக 50 வருடங்களுக்கு முன்பு 1976ம் ஆண்டு ஆவணி மாதாம் ஆறாம் திகதி திருநிலைப்படுத்தப்பட்ட அருட் தந்தை றெறி கலகர் ஸ்காபறோ பொறின் மிசன் குருவாக கடந்த ஐம்பது வருடம் பணிபுரியும் போது இவர் பிலிப்பைன்சில் 25 வருடங்கள் ஞானஸ்நானம், திருமணம் போன்ற தேவ திரவிய அனுமானங்களின் அறியாமையை தெளிவுபடுத்துவதற்காக அரும்பாடுபட்டவர். ஆகவே இவருடைய சேவைகளைப்பபாரட்டி கனடா வாழ் பிலிப்பினோ மக்கள் விருந்துபசாரம் நடத்தினார்கள் அவரை வாழ்த்தும் சடங்குகளையும் நடத்துகிறார்கள். இவரது வாழ்வில் குறைந்தது இருபத்தைந்து வருடங்களாவது தமிழ் மக்களின் தேவைகளிலும் தனது குருத்துவப் பணியை பகிர்ந்துகொண்டவர். கடந்த பத்து வருடங்களாக தமிழ்கத்தோலிக்க வெளியீட்டகத்தின் பணிகளில் தன்னை அர்ப்பணித்து உறுதுணையாக இருந்தவர் அத்துடன் ரொறொன்ரோ மேயர் யோன் ரோறி அவர்கள் இவரது சர்வமத பணிகளைப்பாராட்டி இவருக்கு சான்றிதழ் வழங்கியுள்ளார். மேலும் இவரது சேவை மிகவும் தெய்வீகமாகவும் சுகமாகவும் சுமுகமாகவும் தொடர எமது வாழ்த்துக்கள்.



**தமிழ் கத்தோலிக்க வெளியீட்டகம்**

ஸ்தாபிதம்

ஆனிமாதம் 1995

## முகவரி

2623 Eglinton Ave EastUnit # 2nd floor
Scarborough. On. M1K 2S5

E-mail:-
Tamilcatholicpublication@gmail.com

தொலை பேசி (647) 348 - 5100
தொலைநகல் (647) 348 - 5100

தயாரிப்பு வெளியீடு
தமிழ்க் கத்தோலிக்க வெளியீட்டகம்..



## கிடைக்கும் இடங்கள்

**ரொறொன்ரோவில்:-**
புனித அந்தோனியார் தேவாலயம்
லூர்துமாதா தேவாலயம்

**ஸ்காபரோ:-**
புனித மரிய கொறற்றி தேவாலயம்
தோமாஸ்மோர் தேவாலயம்
பர்ணபாஸ் தேவாலயம்

**ஜேன்ருபிஞ்**
புனித ஒகஸ்ற்ரின் தேவாலயம்

**மிஸிசாக்காவில்:-**
சிற்றி சென்றர் வியாபார
ஸ்தாபனங்களில்

**டொன்மில்ஸ்:-**
புனித 23ம் அருளப்பர் தேவாலயம்

**தமிழ் கத்தோலிக்க புதுவாழ்வுக் குழு**

**தமிழ் மொழிகற்கும் வகுப்புகள்**
**மெக்கா சிற்றி வர்த்தக ஸ்தாபனங்கள்**

**ஆதரவு**

**கனடாத் தமிழ் கத்தோலிக்க சங்கம்.**

# மரியாளின் விண்ணேற்பு.

கத்தோலிக்க கவிஞாா்களும், சித்திரக்கலையர்களும் உலகின் பல திக்குகளிலும் மிருந்தும் மரியன்னையின் விண்ணேற்பு விழா காட்சியை விவரிக்கின்றனர் விசுவாசத்திற்கு கிடைத்த கொண்ட்டாட்டம்தான் ஆண்டவர் தனக்குச் சொன்னது நிறைவேறும் என்று விசுவசித்தவர் "பேறுபெற்றவர்" என்ற எலிசபேத்தின் வாழ்த்து கடவுள் அவரோடு இணைந்து வாழும் மக்களின் மாபெரும் வெற்றி சிறந்தது என்பதையே சொல்கிறது கடவுள் தான் கன்னிமரியாள் தன் தாயின் வயிற்றில் கருவாக தோன்றுவதற்கு முன்பே தேர்ந்து எடுத்து வானகத் தந்தையின் அருளால் நிரப்பப்பட்டிருந்தார். ஆகவேதான் கபிரியேல் மரியாளை அழைக்கும்போது "அருள்நிறைந்தவளே வாழ்க என்று வாழ்த்தி வெளிப்படுத்த மரியாள் தானும் கடவுளைத் தேர்ந்து கொண்டதை "உம்மால் ஆகாதது ஒன்று மில்லைத்தான், என்று உம் சித்தத்தின் படியே எனக்கு ஆகட்டும் அச்சமும் கலக்கமும் அவள் பதிலை நிற்பந்திக்கவில்லை வாக்கு கொடுப்பவர் நிறை வேற்றுவார் என்ற நிறைவிருப்பத்தில் இறைவார்த்தையை அவர் வரவேற்றார். இனிமேல் தாழ்மை நிலையினர் புது வழியைப் பெறுவர் புதிய நியம முறைகள் அனைத்தும் உதிக்கும் கடவுளின் மீட்பும் மண்ணக மனித வாழ்வில் விண்ணகம் வரை எட்டும் என்று அன்று விசுவசித்தால் விசுவாசிகளின் அதே விசுவாசம் அவரை விண்ணரசியாகவே உயர்த்திவிட்டது.

வார்த்தையை வரவேற்போம் விண்ணகவலிமையை பெறுவோம். இப்போது அவர் தம் திரு மகனின் மகிமையில் முழுமையாய் பங்கு கொள்கின்றார். அன்னை மரியா இவ்வுலகில் தமது வாழ்வினை முடித்த நேரத்தில் தம் மகனால் மகிமைப்படுத்தப் பட்டதை ஆவணி மாதம் 15ம திகதி திருச்சபை மகிழ்ச்சியுடன் கொண்டாடி மகிழ்கின்றது. அன்றைய முதல் வாசகம் தீமைக்கு எதிராகத் தினமும் போரட்டம் நடத்தும் திருச்சபைக்கு பதிலாளியாக அன்னை மரியாளை குறிப்பிடுகின்றது. பறவை நாகத்துக்கு எதிராக எழுந்துள்ளதும் இந்த அன்னை மரியாதான் இந்தப் போராட்டத்தின் வெற்றி அவருடைய மகன் இயேசுவேதான் மேலும் விசுவசித்தவர் மேலும் விசுவாசித்தவர் பேறு பெற்றவர். கன்னிமரியின் மகிமைக்கு ஊற்றாக இருப்பது இறைவனின் வார்த்தையை அவர் முழுமையாக ஏற்று விசுவசித்ததே! தம் வயிற்றின் கனியான இயேசுவோடு இணைந்து மனித விடுதலைக்குத் தன்னை ஒப்புக்கொடுத்த தாய்மரி விடுதலையின் மகிமையில் தன் மகனுக்கு அடுத்தபடியாக பங்கெடுப்பது நியாயமானதே! உரிமைக்கீதம் பாடிய தாய் மரி நம் உணர்வுகள் எல்லாம் அறிந்தவர்தான். பிள்ளைகளாகிய நாமும் அவரது வழியில் மீட்படைவதே அவரது விருப்பமும் ஆகும்.

ஆகவே முதலாம் நூற்றாண்டு தொடக்கம் இன்று வரையும் அன்னையானவள் விண்ணுலகில் இருந்து மண்ணுலகம் வந்து அவ்வப்போது சிறுவர்களைச் சந்தித்து அவாகளிடம் சமாதானம் என்றும், செபமாலையென்றும், தான் அமலோற்ப நாயகி என்றும் பலதரப்பட்ட செய்திகளை பரிமாறி வருகிறார். வேளாங்கன்னியில் ஒரு சிறுவனுக்கு பால் வார்த்து அவன் முடமையை நீக்கினார். லூர்து மாதா பதியில் ஆடு மேய்த்த பேர்னபேத்தம்மாளினிடம் காட்சி கொடுத்து செபம் செய்ய கேட்டது மட்டுமல்லாமல் அவவின் உடல் இன்று வரை அழியாது பாதுகாக்கப்பட்டு வருகிறது. பாத்திமாவில் மூன்று சிறுவர்களுக்கு தோன்றி காட்சி கொடுத்தது மல்லாமல் தான்தான் அமல உற்பவ நாயகி என்று பகிரங்கப்படுத்தியதுடன் பரலோகம் வரச் செபமாலை செய்யுங்கள் என்று கேட்டுக்கொண்டார்.

எல்லா பெண்களும் தாய்மைப் பேறு அடைவது இயல்புதான் ஆனால் அந்தப் பேற்றைத் தரும் இறைவனுக்கே தாயாகும் பேற்றை மரயாளுக்கு தர தேர்ந்த்தெடுத்ததோடு, அந்தப் பேற்றை அந்தத் தாய் உலக மீட்பிற்காக தியாகம் செய்ததால் இறைவன் தரும் மாட்சிமைதான் மரியாளின் விண்ணேற்பு என்ற நம்பிக்கையுடன் கூடிய வாழ்வை வரமாகக் கேட்டு செபமாலையை முடியுமானளவு ஓதி ஒப்புக்கொடுத்து விண்ணேற்பு வாழ்வுக்கு நம்மை ஒப்புக்கொடுப்போம்.

**மறைபணி தோமாஸ் டேவிட் நிர்வாக ஆசிரியர்.**

# மாதாவின் மகிமை

தாய் என்பவள் குழந்தைக்கு மிக முக்கியமான தொப்புக்கொடி உறவு. தாயின் அன்பான அரவணைப்பிலும் பாசத்திலும் வளருகின்ற குழந்தை பிற்காலத்தில் சமுதாயத்தில் நல்ல மனிதனாக உருவாகின்றான்.

இதனால் தான் கடவுள் தமது அன்பான மகனை இந்த உலகிற்கு அனுப்புவதற்கு ஒரு தாயை தேடி னார். அன்னை மரியாள், .கடவுள் நினைத்திருந் தாள் தம் ஒரே மகனை தன்னிச்சையாக அனுப்பி தன்னந்தனியே வளர விட்டிருக்கலாம். .ஆனால இறைவன் அப்படி செய்யவில்லை. காரணம் உல கில் உள்ள உயிரினங்கள் அத்தனையும் உருவாக் கம் எடுத்தபோது இயற்கை வழியாகவே உலகில் தோன்றின அதற்கு இணங்க தாய்மையின் தன் மையை இயற்கையாகவே இறைவனும் ஏற்றுக் கொண்டு மரியாளை தாயாக தேர்ந்து எடுத்து மகத்து வமும் மகிமையும் அளித்தார்.

சக்கரியாஸ் என்பவர் ஒரு பக்திமான் அவர் ஓரு தேவாலயப் பணி குருவாணவர் குறிப்பிட்ட காலத்தில் அவர் பணிபுரிந்த தேகலயத்தில் தூபம் காட்டும் பணியைச் செய்ய தேர்ந்து எடுக்கப்பட்டவர் அவரும் அவரது மனைவி எலிசபெத்தம்மாளும் வயது முதிர்ந்தவர்கள் ஆனால் அவர்களுக்கு குழந்தைகள் கிடையாது. அன்றொருநாள் அவர் பணியில் இருந்தபோது கபிரியேல் வானதூதர் அவர் முன் தோன்றி அவரது மனைவி கருத்தரித்திருப் பதையும் அந்த குழந்தைக்கு அருளப்பர் என்று பெயர் சூட்டுமாறும் கூறீனார் .ஆனால் சக்கரியாசோ அது எங்கனம் ஆகும் நானும் எனது மனைவியும் வயதானவர்கள் என்று அச்சத்துடன் கேள்வி எழுப்பினார். இதனால் கோபமடைந்த வானதூதர் அவரிடம் கடவுளின் வார்த்தைகளை நம்பாத நீர் இது நடக்கும் வரைக்கும் ஊமையாகக் இருக்கக்கடவாய் என்று அவருக்கு தண்டனை வளங்கி விட்டுச் சென்றார்.

இதே வானதூதர் தேவதாயாரிடம் சென்று பரிசுத்த ஆவியின் வல்லமையினால் கருத்தாங்கி ஒரு மகவைப் பெறுவார் என்றும் அதற்கு இயேசு என்று பெயர் சூட்டும் படியும் கூறிய போதும் தேவதா யாரும் இது எங்ஙனம் ஆகும் நானோ கணவனை அறியேன் என்று கூறியபோதும் வானதூதர் கோபப்படவில்லை மாறாக அவர் மரியே அஞ்ச வேண்டாம் பரிசுத்து ஆவியானவரால் இது நடைபெறும் இது கடவுளின் வாக்கு என அவருக்கு மிகவும் தெளிவாக விளக்கம் அளித்தார்.

இதன் மூலம் நாம் தெரிந்துகொள்ள வேண்டியது என்ன? இறைவன் மரியன்னைக்கு பரிந்துரை செய் யும் உரிமையையும் அவரை மேன்மைப்படுத்தும் முக்கியதத்துவத்தையும் வெளிப்படுத்துபவராகவும் விளங்கினார் கானவூர்த் திருமணத்தின்போது தண்ணீரை இரசாமாக்கும் கிறிஸ்த்துவின் முதல் புதுமையையும் தேவதாயின் பரிந்துரை செய்யும் பணியையும் கிறிஸ்துவை வெளிப்படுத்தி தெளிவு படுத்தவும் புகழ்ச்சியும் பெருமையும் கொடுத்துள்ளார் என்பதை காண்கின்றோம்.

ஆனால் கத்தோலிக்க திருச்சபையிலிருந்து பிரிந்து சென்ற சகோதர சகோதரிகள் எம் அன்னை கன்னி மரியாவை புறம்தள்ளி விட்டு மகனை மட்டும் வேண்டி நிற்கின்றனர். இது எவ்வளவு வேதனைக் குரிய விடையம் என்பதை அவர்கள் உணர் வதில்லை.

அன்னை பிறந்த நாள் தொடங்கி இன்று வரை அன்னையின் புதுமைகளும் அற்புதங்களும் எண்ணிலடங்காது .அன்னையின் அருள் பெற்றவர் கள் கோடான கோடி பக்தர்கள் நலமுடனும் வள முடனும் அன்னையின் அரவணைப்பில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

அருள் நிறைந்தவளே வாழ்க ஆண்டவர் உம்முடனே என்ற வார்த்தையை நாம் எத்தனை முறைகள் உச்சரித்தாலும் சலிப்பு என்பதே கிடையாது. மாறாக ஒரு புத்துணர்வு மனமகிழ்ச்சியும் ஏற்படுகின்றது என்பதை ஒவ்வொரு கிறிஸ்தவர்களும் உணர்ந்துள் ளனர். அன்னையின் அன்பையும் பரிந்துணர்வையும் வேண்டுவதற்கும் செபிப்பதற்கும் ஒன்று சேர்ந்து செபிப்போம்.

தேவ தாயார் எம்மிடம் கேட்பதும் விரும்புவதும் ஒன்றே ஒன்று தான் ஜெபமாலை ஜெபியுங்கள் அப்போது உங்கள் கவலைகள் கண்ணீர்கள் கரைந்து விடும். அன்னைக்கு புகழ் பாடுவோம் இயே சுவே உமக்குப் புகழ். இயேசுவே உமக்கு நன்றி .மரியே வாழ்க. ஓமரியாயே இயேசுவின் தாயே உமது இருதயத்தைப் போல எமது இருதயத்தை ஆகப்பண்ணியருளும் .ஆமென்.

திருமதி ஆன்மேரி யோசேப்.

ஆண்டவரே காத்தருளும் ஏனெனில் உலகில் இறை யன்பர்கள் அற்றுப் போயினர் மானிடருள் மெய்ய டியார் மறைந்து போயினர் (திருப்பாடல் 12:1)

# ஜெபமாலை திருத்துவத்தின் புகழ்மாலை

ஜெபமாலை யாருக்காக சொல்லப்படுகிறது, யாரை மகிமைப்படுத்த சொல்லப்படுகிறது?

ஜெபமாலை தமதிருத்துவத்தை போற்றி புகழத்தான் சொல்லப்படுகிறது. வெளிப்பார்வைக்கு மாதாவை புகழ்வது போல் தோன்றினாலும் உண்மையில் புகழப்படுவது தமத்திருத்துவமே. அதனால் தான் ஜெபமாலைக்கு இத்தனை சக்தி.

சர்வ வல்லமை படைத்த தமதிருத்துவத்தின் சக்தி வெளிப்படுவதால் தான் சாத்தான் அஞ்சி நடுங்கி ஒட்டம் பிடிக்கிறான். நாம் சொல்லும் ஒவ்வொரு அருள்நிறை மந்திரத்திலும் பிதாவாகிய சர்வேசுவரன்; சுதனாகிய இயேசு; பரிசுத்த ஆவியானவர் மகிமைப்படுத்தப் படுகிறார்கள்.

இயேசு கற்றுக்கொடுத்த பரலோக மந்திரம் மாதா கற்றுக்கொடுத்த ஓ என் இயேசுவே, பிதா கற்றுக் கொடுத்த " அருள் நிறை மரியே வாழ்க கர்த்தர் உம்முடனே ", பரிசுத்த ஆவியானவர்கற்றுக்கொடுத்த " பெண்களுக்குள் ஆசீர்வதிக்கப்பட்டவர் நீரே ! உம்முடைய திருவயிற்றின் கனியாகிய இயேசுவும் ஆசீர்வதிக்கப்பட்டவரே " இருப்பதால் ஜெபமாலை மகிமை பெறுகிறது.

மேலும் பரலோக மந்திரமும், அருள் நிறை மந்திரமும் பன்மையில் ஜெபிக்கப்படுவதால் இந்த உலகத்தில் வாழும் எல்லோருக்காகவும் நாம் சொல்லும் ஒவ்வொரு பர-அருள் மந்திரங்கள் அமைவதாலும் அதற்கு அவ்வளவு மகிமை. இப்போது புரிகிறதா ? மாதா தன் ஒவ்வொரு காட்சியிலும் " ஜெபமாலை சொல்லுங்கள் " பாவிகள் மனந்திருந்த " ஜெபமாலை சொல்லுங்கள் " என்று ஏன் கேட்கிறார்கள் என்று.

மாதா கேட்காத விசயங்களான அவர் சொரூபத்திற்கு சேலை கட்டுவோம்; வேளாங்கன்னி, பூண்டி சென்று மொட்டை போடுவோம் ஆனால் அன்னை அவர்கள் விரும்பி கேட்கும் ஜெபமாலையை மட்டும் சொல்ல மாட்டோம் என்றால் இது என்ன நியாயம்? நாம் எப்படி சொல்ல முடியும் " நாங்கள் மாதாவின் பிள்ளைகள் " " நாங்கள் மாதாவை நேசிக்கிறோம் " என்று. அப்படி சொன்னால் அது பொய்தானே? ஜெபம் செய்வோம்; தினம் ஜெபமாலை சொல்வோம்; பாவத்திற்காக பரிகாரம் புரிவோம் " என்று மாதாவே சரணம் பாட்டில் நாம் அடிக்கடி சொல்லும் பொய் போலத்தான் இந்த பொய்யும்.இயேசுவின் இரத்தம் ஜெயம் ! இயேசுவுக்கே புகழ் !

## சத்தியம் விடுதலையாக்கும்

**தேவ பாதுகாப்பில் உள்ள நம்பிக்கையை பற்றிய விசுவாச அறிக்கை.** எனக்கு விரோதமாய் உருவாக்கப்படும் எந்த ஆயுதமும் வாய்க்காதேபோகும். எனக்கு விரோதமாய் நியாயத்தில் எழும்பும் எந்த நாவையும் நான் குற்றப்படுத்துகின்றேன். இது கர்த்தருடைய ஊழியக்காரனாகிய என்னுடைய சுதந்திரம். சேனைகளின் கர்த்தராகிய உம்மிடமிருந்து என் நீதி வருகிறது. எனக்கு விரோதமாகப் பேசுபவர் களையும், எனக்கு விரோதமாக ஜெபிக்கின்றவர் களையும், எனக்கு தீமையும், கேடும் உண்டாக வேண்டும் என விரும்புபவர்களையும், என்னை ஒதுக்கி தள்ளியவர்களையும் நான் மன்னிக்கின்றேன்.அவர்களை மன்னித்து கர்த்தருடைய நாமத்தில் அவர்களை ஆசீர்வதிக்கிறேன். இப்பொழுதும் கர்த்தாவே நீர் மட்டுமே என் கர்த்தர் என்றும் , என்னுடைய இரட்சகர் என்றும், உம்மைத் தவிர வேறே தேவர்கள் இல்லை யென்றும். நான் அறிக்கையிடுகின்றேன். நீர் நீதியுள்ள தேவன், இரட்சகர், பிதா, குமாரன், பரிசுத்த ஆவியான வராகிய உம்மை நான் ஆராதிக்கின்றேன் . நான் என்னை இந்த புதிய நாளில் இந்த இரவில் எந்த நிபந்தனையு மின்றி கீழ்படிதலுக்கு ஒப்புக் கொடுக் கின்றேன். நான் பிசாசையும், அவனுடைய நெருக்குதல் களை யும், அவன் தரும் பிரச்சனைகளையும்,அவன் தரும் ஏமாற் றங்களையும், அவன் எனக்கு விரோதமாக பயன்படுத் தும் ஒவ்வொரு ஆயுதத்தையும், நபரையும் எதிர்க்கின் றேன். அதற்கு என்னை ஒப்புக் கொடுக்க மறுக்கின் றேன் ! அவனுக்கு எதிர்த்து நிற்கின்றேன். இயேசுவின் நாமத்தில் அவனை விரட்டி அவனை ஒதுக்கி வைக்கிறேன். சிறப்பாக நான் எதிர்த்து தள்ளி வைப்பது பெலவீனம், வலி, நோய், நுண்கிருமிகள், எல்லா விதமான பில்லி சூனியங்கள். இறுதியாக கர்த்தாவே! இயேசு கிறிஸ்துவின் சிலுவையின் தியாக மரணத் தினாலே நான் சாபத்திலிருந்து நீங்கி, நீ சகல வித்திலும் ஆசீர்வதித்த ஆபிரகாமின் ஆசீர்வாதங் களுக்குள் கடந்து வருகின்றேன். அவை உயர்வு, ஆரோக்கியம், கனி தரும் தன்மை வளமை, வெற்றி, தேவ கிருபை. ஆமென். (by derick prince)



## 02-08-1913 01-09-1980

## தமிழால் உலகாண்ட தனிநாயக அடிகளாரின் நூற்றி மூன்றாம் ஆண்டு.

**தமிழ் மண் காக்க ஓங்கி ஓலித்த தனிநாயக் அடிகளின் தொலை நோக்குச் சிந்தனை**

சென்ற சில திங்கள்களாக வடமாகாணம் கீழ்மாகாணங்களில் சொற் பொழ்வுகள் ஆற்றிய பொழுது நம் ஈழத் தமிழ் நாட்டின் பொருளியல் சமூமுன்னேற்றங்களைப்பற்றி அறிஞருடன் கலந்து உரையாட எனக்கு வாய்ப்புக்கிடைத்தது. மேலும் வவுனியா தொடங்கி யானையிறவு ஈறாக இடையேயுள்ள நிலப்பரப்பின் எதிர் கால முன்னேற்றத்தையும் உணர்ந்தேன்.

கோவிலுஞ் சுனையும் உள்ள கடல் சூழ்ந்த திருமலையின் குடாவையும் பாறையையும் அதனைச் சுற்றியிருக்கும் நீர்பரப்பு நிலப்பரப்பின் அழகையும்கண்டு வியந்தேன். கீழ் மாகாணத்தில் கடலுடன் கலக்குமுன் மாவலி கங்கையின் இரு மருங்கும் தன் சேயைப்போல் நீரூட்டும் பச்சைக்கழனிகளைக் கண்டு மகிழ்ந்தேன்.மட்டக்களப்பின் தென்பாகத்தில் காரை தீவு அக்கறைப்பற்று முதலிய இடங்களில் முஸ்லீம் மக்கள் பொன்னிறக் கதிர்களை வெட்டிக் குவிப்பதைக் கண்டு களித்தேன்.

சென்றவிடமெல்லாம் தமிழ்பேசும் மக்களனைவரிடமும் புது உணர்ச்சியும் புது ஆர்வமும் தோன்றியது .தனிச் சிங்களம் சட்டமானதும் தமிழ் மக்களுக்கு முன்பு இராத உணர்ச்சியும் ஓற்றுமையும் தோன்றிற்று.தமிழ் பேச்சு இனம்(வுயஅடை யேவழைெ) என்னும் புத்துணர்ச்சி பெருக்கெத்து ஒடுவதைக் கண்டேன்.

எதிர்காலத்தில் தமிழ்மொழி செல்வாக்குடன் வளர்வதற்காகத் தமிழ் பேசும் மக்கள் சிறப்பாக வாழும் மாவட்டங்களை நாம் இன்றே பல துறைகளிலும் சீர்திருத்திக் கொள்ளுதல் வேண்டும்.

நம் மாகாணங்களில் காடாகக் கிடக்குமிடங்களை நாடாக்குவது நம்முடைய கடமை.தென்மாகாணங்களில் செல்வமுள்ள தமிழர் வடமாகாணம் கீழ் மாகாணங்களில் நிலம் வேண்டி நெல். கரும்பு முதலிய பயிர்களை விளைத்து உழவுத் தொழிலும் தோட்டத்துத் தொழிலும் சிறக்கச்செய்வதால் ஈழத் தமிழ் நாட்டில் பொருளியற் துறைகளில் நாம் முன்னேறுவதற்கு வழி வகைகளைக் காண்பர்.தென் மாகாணங்களில் தங்க விருப்ப மில்லாத தழிழர் ஒன்று சேர்ந்து வடமாகாணம் கீழ்மாகாணங் களில் புது நகர்களை அமைத்து ஈழத் தமிழ் நாட்டின் முன்னேற்றத்திற்குத் துணை புரியக்கூடும்.வடமாகாணம் கீழ் மாகாணங்களில் கூடிய விரைவில் தமிழ் மக்கள் குடியேறு வதும் நம் எதிர் கால நலன்களுக்கு இன்றியமையாததாகும்.

ஆவது அறிந்து அறிவுரை வழங்கிய அடிகளாருக்கு தலை தாழ்த்தி வணக்கம் செலுத்துவோமாக

## Father Thaninayagam was very conscious of the concept of a homeland for the Tamils.

This is a true translation of what Father Thaninayagam said in Tamil.

While I was delivering speeches regarding the economic and social advancement of the people of the northern & Eastern provinces , I had the singular opportunity of sharing my thoughts with a good number of learned scholars. Also I felt that there is a dire need of realizing the future of the lands that lie in between Vavuniya & the Elephant pass.

I highly apprectated with a sense of great admiration the scenic beauty of the koneshwara temple surrounded by attractive hills and waterefalls.

Also I was spell bound by the child like resemblance of the green paddy fields on either side of the mahavali Ganga before it has its confluence in the ocean. I felt overjoyed when I witnessed the plentijul paddy harvest of our Muslim brothers who are living in the South of Batticaloa such as Karaithivu & Akkarai pattu.

Wherever I went I met Tamil speaking people with a fullness of enthusiasm and a feeling for the tamil course following the passing of the singala only act I witness a sense of unit and strong renewed feeling for the libration course this feeling was prebalant during the earlier priod. I also witnessed the Tamils were conseious that there nation

I felt that there was a need to bring in radical changes in these districts for the betterment for the peope in these areas. It is our duty to convert the forest areas into a convenient habitat. The rich Tamils living in the Southern areas of Sri Lanka should purchase lands in the Northern & Eastrern provinces and cultivate paddy, sugar caine and other crops in our Tamil areas and economically make the areas prosperous.

The Tamils who do not want to live in the Southern areas must collectively get together and build model cities in the Tamil Eelarn areas. Such efforts will bear frut in numerous ways.

In essence shifting of the Tamil people towards Northern and Eastern Provices- the traditional home land of the Tamils will go long way to evolve a nation

Father Thaninayagam possessed a political foresight to what the future holds for the tamils. Let us salute our beloved Father for his vision. **M.K Eelaventhan.**

## வாழ்த்துரை

“அன்பு மக்களே” என்ற தலைப்பில் தமிழ் கத்தோலிக்க வெளியீட்டகம் வெளியீடும் வெளியிடு காலத்தால் சாகாது. ஞாலத்தில் நிலைத்து நிற்பது உறுதி. அன்பிலே தோன்றி அன்பிலே தோய்ந்து இறையருளை இறைஞ்சி நிற்கிறோம். அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ் என்பதற்கு அமைய எல்லைகளைத் தாண்டி நாம் அன்பை செலுத்து வோமாயின். உலகில் உண்மையான அமைதி நிலவுவது உறுதி.

தங்கள் கத்தோலிக்க கிறித்தவ தமிழ்ப் பணி வெல்க! வாழ்க! என வாழ்த்தி விடை பெறுகிறோம். இறைமைந்தன் இயேசுவை இதயத்தில் ஏற்றி அன்பு வெள்ளத்தில் நாம் அனைவரும் முழ்குவோமாக.

**மா. க. ஈழவேந்தன்**

முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர்.

## Back to School அமெரிக்கப்பயணம்

செப்பரம்பர் மாதம் 3ம் 4ம் 5ம் திகதிகளில் அமெரிக்காவில் உள்ள நியோக் நகரத்திற்கும் பிற்ஸபேக் நகரத்திற்கும் பென்சலவேணியாவில் உள்ள கிறோ சிற்றியில் பிறைம் அவுட்லட் மற்றும் உலகப் புகழ் பெற்ற இடங்களுக்கும் சென்று வருவோம் இதனால் உங்கள் அறிவுக்கும் ஆன்மீகத்திற்கும் உறுது னையாக அமைவதுடன் உங்கள் பிள்ளைகளின் பாடசாலைத் தேவைகளையும் நிறைவு செய்ய இது ஒரு சந்தர்ப்பம் இந்த மூன்று நாள் பிரயாணத்தில் உங்கள் வாழ்வில் மறக்கமுடியாத அனுபவங்களை பெறுவீர்கள் காட்சிகளை மீண்டும் பார்ப்பதற்கு உங்கள் கமாறாக்களை கொண்டு வாருங்கள் 30து வருடம் சுற்றுலா அநுபவம் அனுபவங்களுடன் விளக்கம் தரக்கூடியவர் உங்களை வழி நடத்துவா. இந்த மூன்று நாட்களும் நீங்கள் பிரயாணம் செய்வதற்கும் இரண்டு இரவு தங்குவதற்கும் காலை உணவுடன் இருநூற்றி ஐம்பது டொலர்கள் மட்டும் தொடர்பு கொள்ளவேண்டிய தொலை பேசி இலக்கம் 647 348 5100

## *அறிவிப்பு*

“அன்புமக்களே” தமிழ் கத்தோலிக்க சஞ்சீகையை இலவசமாக விணியோகம் செய்யும் பிரதிநிதிகள் சில நகரங்களுக்குத் தேவை இறை பக்தித்தொண் டார்களாக தன்னார்வத்துடன் உங்கள் அயலவர்கள், உறவினர்கள் உங்கள் சமூக உறுப்பினணாகளுக்கு கொடுத்து உதவ விரும்பினால் விரும்புபவர்கள் எங்களுடன் தொடர்புகொள்ளுங்கள் அத்துடன் ஆக்கங்கள் எழுதி அனுப்ப விரும்புகிறவர்கள் தயவு செய்து எமது விலாசத்திற்கு அனுப்பி வையுங்கள் 6473485100

***செபமாலை தாசர்களின் தொலைபேசி***

***இலக்கம் 1519 689 7760***

## *செபமாலை தாசர் இல்லம்.*

இலங்கையில் அருட் தந்தை தோமாஸ் அடிகளால் ஆரம்பிக்கப்பட்ட செபமாலை தாசர் இலண்டன் ஒன்ரா றியோ மறை மாவட்டத்தில் இலண்டன் மறை மாவட்ட யாத்திரை ஸ்தலத்தை இயக்கிக்கொண்டு அங்கே அரு காமையில் உள்ள மக்களுக்கும் மறை பணி ஆற்றிக் கொண்டும் இரண்டு பங்குகளை வாழி நடத்திக்கொண்டும் இருக்கிறார்கள் கனடாவில் ரொறொன்ரோவுக்கு வெளியில் மூன்று தமிழ் குருக்கள் அங்கு தங்கி இறை பக்தியிலும் மறை பணியிலும் தங்களை முழுமையாக அற்பணம் செய்துள்ளனர் அத்துடன் வாரம் தோறும் நடைபெறும் **“பரம்பொருள்”** தமிழ் கத்தோலிக்கவானொலி நிகழ்விலும் தங்களின் பங்களிப்பை சிறப்பாக தருகிறார்கள். மேலும் வருடம் முழுவதும் யாத்திரிகர்களாக வருகை தரும் மக்களை இன்முகத்துடன் வரவேற்று ஆண்மீகத்துணை புரிந்து கொண்டிருக்கிறார்கள் இங்கு புனித கதவும் உண்டு வருகின்ற செப்பரம்பர் 10திகதி 2016ல் தமிழ் மக்களுக்காக யாத்திரை நடைபெறுகிறது அனைத்துத் தமிழ் மக்களையும் அன்புடன் வரவேற்கிறார்கள்.

### தமிழ் கத்தோலிக்க வெளியீட்டகத்தின் வேண்டுகோள்

“அன்பு மக்களே “ என்ற பெயருடன் கடந்த 21 வருடங்கள் உங்கள் மத்தியில் வருகை தரும் தமிழ் கத்தோலிக்க வெளியீடு ஒண்டாறியோ அரசாங்க விதி முறைகளுக்கு இணங்க வரையறுக்கப்பட்டு பதிவு செய்து கத்தோலிக்க செய்திகள் . செபங்கள் .திருநாட்கள் .திரு வழிபாட்டு நேர அட்டவணைகள் கவிதைகள் .புனிதர் களின் சுயசரிதைகள் .திருச்சபையின் சுற்றறிக்கைகள் விவிலிய சங்கீதங்கள் நற்செய்தி வாசகங்கள் இறையியல் கருத்துக்கள் .தமிழ்ல் வாசிக்கும் ஆர்வத்தையும் .தமிழ் எழுத்தாளர்களின் ஆக்கங்களையும் வளர்க்க அனைவரையும் இணைக்கும் ஒரு பாலமாகவும் வெளியிடுகின்றோம். இதனால் பல ஆயிரத்திற்கு மேற்பட்ட குடும்பங்கள் நன்மை அடைகிறார்கள். ஆகவே இறைபக் தியையும் விசவாசத்தையும் தமிழில் வாசிக்கும் ஆர்வத் தையும் ஊக்குவிக்கும் முகமாக இச்சேவையைச் செய்கின்றோம். மாதந்தம் தோறும் உங்கள் இல்லம் சஞ்சீகையை அனுப்புவோம், வாரந்தோறும் வானொலியில் கேட்கும் கத்தோலிக்க “பரம்பொருள்” நிகழ்வுக்கும் இதற்குத் தேவையான உதவிகளையும் அன்பளிப்புக் களையும் தந்து உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள் கின்றோம்.

பெயர் ..........................................................................

விலாசம்,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,

..........................................................................

தொலைபேசி இலக்கம்..........................................................

உங்கள் உறவினர்கள் வெளிநாடுகளில் இருந்தாலும் அவர்களுக்கும் நாம் அனுப்பிவைப்போம். நீங்கள் செய்ய வேண்டியவை மேழே உள்ள படிவத்தை நிரப்பிக் காசோலையுடன் அனுப்பிவையுங்கள்.

வருடசந்தா விபரம்

கனடாவுக்குள் 30 டொலர்

வெளிநாடுகளுக்கு 50 டொலர்

காசோலை அனுப்பவேண்டிய முகவரி

TAMIL CATHOLIC PULICATION

2623 EGLINTON AVE EAST

SCARBOROUGH ON M1K 2



# அருட்சுடர்

## August - 2016

### கத்தோலிக்க புது வாழ்வு தமிழ் பணி கனடா

### Catholic New Life Tamil Ministry of Canada




### நமது கவலை!

வகுப்பில் 99 புள்ளிகள் பெற்ற மாணவன் துக்கத்தில் இருக்கிறான். 30 புள்ளிகள் பெற்ற மாணவன் மகிழ்ச்சியால் துள்ளிக்குதிக்கிறான். ஆசிரியர் 99 புள்ளிகள் பெற்ற வனிடம், ஏன் நீ துக்கமாக இருக்கிறாய் 99 புள்ளிகள் பெற்றிருக்கிறாயே என்று கேட்டார். அவன் கூறினான், ஒரு புள்ளியை இழந்து விட்டேன் அதுதான் எனது கவலை என்று. 30 புள்ளிகள் பெற்றவனிடம் ஏன் நீ இவ்வளவு மகிழ்ச்சியாய் இருக்கிறாய் என வினவினார் ஆசிரியர். இந்த 30 புள்ளிகளும் எனக்கு எப்படிக் கிடைத்தனவோ தெரியாது அதுதான் நான் மகிழ்ச்சியில் துள்ளிக்குதிக்கிறேன் என்று கூறினான் அவன்.



**இல்லாததைக் குறித்து நாம் கொள்ளும் கவலை, இருப்பதையும் அனுபவிக்க முடியாமல் தடுத்துவிடும்.**

### மகிழ்ச்சி நிறைந்த குடும்பம்.

கணவன் மனைவியை சத்திர சிகிச்சைக்காக வைத்திய சாலைக்கு அழைத்துச் சென்றார். பரிசோதனைக் குப்பின் சிறிய (மைனர்) சத்திர சிகிச்சை ஆனால் ஒருமாதம் மனைவி வைத்திய சாலையில் இருக்க வேண்டுமென்றார் வைத்தியர். கணவர் அப்படியா டொக்டர். அப்படியானால் பெரிய (மேயர்) சத்திர சிகிச்சை செய்யுங்கோ டொக்டர் என்று கூறினார். மனைவியைப் பிரிந்து வாழ்வதில் கணவருக்கு அவ்வளவு சந்தோசம்.



இன்பத்திலும் துன்பத்திலும், உடல் நலத்திலும் நோயிலும் ஒருவருக்கொருவர் துணையாயிருப்போம் என ஆலயத்தில் கூறும் வார்த்தைகள், இதுவெல்லாம் திருமணத்திற் காக கூறும் வெறும் வார்த்தைகளாகவே பல குடும்பங்களில் மாறிவிட்டன. **கணவன் மனைவி ஒருவருக்கொருவர் எப்பொழுதும், எல்லாவகையிலும் துணையாயிருப்போம். அதுவே மகிழ்ச்சி நிறைந்த குடும்பம்.**

### உன்னால் முடியும்!

உன்னால் முடியாதென்று நினைத்து
முடங்கிவிடாதே மூலையிலே....!
எல்லாம் தொட்டுவிடும் தூரமே
துவண்டுவிடாதே வாழ்க்கையிலே....!!





எலும்பில்லா எறும்புகூட தன்
எல்லையை மீறி ஓடும்போது....
எல்லாம் கொண்ட நீ மட்டும்
தடம்புரண்டு நிற்கிறாய் ஏனோ....?

எரிமலையாய் பொங்கியெழு
உயர்வு உண்டு எப்போதும்.....!!
தொடர் முயற்ச்சி உனக்கிருந்தால்......
தொலைதூர வெண்ணிலவும் உன்
தோல்சாய ஆசை கொள்ளும்.....!



### கைத்தொலைபேசியை எதற்கு வைத்திருக்கிறாய்?

வீதியில் சென்றவனை வாகனம் அடித்து குற்றுயிராய்க் கிடக்கிறான். எல்லோரும் அவனை நோக்கி ஓடுகிறார் கள். அவன் அருகில் வந்தவர்கள் தமது முக நூலில் (Face book) கைத்தொலைபேசியின் மூலம் அவனைப் படம் பிடிக்கின்றனர். அருகில் வந்தவர்கள் யாரும் அவசர உதவியாளர்களை வரவழைப்பதற்காக தமது கைத்தொலைபேசியைப் பயன்படுத்தவில்லை.



**கீழே விழுந்தவனை செல்பி எடுத்து முகநூலில் போடாதே! கீழே விழுந்தவனை மீண்டும் எழுந்து நிற்பதற்காக உன்னிடம் உள்ளதைப் பயன்படுத்து!**

### தாயின் மகிழ்ச்சி சமைத்து முடிப்பதில் அல்ல, பிள்ளைகள் சாப்பிட்டு முடிப்பதில்!

தாய் தன் பிள்ளைகளுக்கு சமைப்பதில் மகிழ்வதை விட, தான் சமைத்ததை தன் பிள்ளைகள் சாப்பிட்டு முடிப்பதில்தான் மகிழ்ச்சி அடைகிறாள். அது போலவே கடவுளும் தன் மக்களுக்காகப் படைத்த இவ்வுலகில் அவர் பிள்ளைகள் விடுதலையோடும், வெற்றியோடும், மன மகிழ்வோடும் நிறைவாழ்வு வாழவேண்டும் என்றே ஆசிக்கின்றார். அதற்காகவே தன் திருமகனை சிலுவையிலே பலியாகத் தந்தார்.



## இதயத்தைத் திறந்தால் தலையை சுவரில் அடிக்கமாட்டாய்!

கதவின் திறப்பைத் தொலைத்தவர் வீட்டில் உள்ள இரும்புச் சுத்தியலை எடுத்து பூட்டின் தலையில் அடித்து பூட்டை உடைத்து உள்ளே சென்று மற்றத் திறப்பை எடுத்து பூட்டின் அருகில் வைத்தார். அருகில் இருந்த சுத்தியல் அத்திறப்பைப் பார்த்து நான் இவ்வளவு பலசாலியாக இருந்தும் என்னால் இந்தப் பூட்டை உடைத்துத்தான் திறக்க முடிந்தது, நீ எவ்வாறு இப்பூட்டை இலகுவாகத் திறக்கின்றாய் எனக் கேட்டது. அதற்கு திறப்பு கூறியது என்னை விட நீ பலசாலி என்பது உண்மைதான், நீ இந்தப் பூட்டைத் திறப்பதற்கு தலையில் அடிக்கின்றாய், நானோ பூட்டின் இதயத்திற்குள் போகின்றேன் என்றது.



**ஆம் இறைவன் இதயத்திற்குள் வந்தால் வாழ்க்கை சுகமாகும். இல்லையேல் தலையை சுவரில் அடிக்க வேண்டியதாகிவிடும்.**

## குழந்தைகளுக்குத் தேவையானதைக் கொடுத்தல்!



வயிற்றில் உள்ள குழந்தையைப்பற்றிய தாயின் உணர்வுகள் மிகவும் முக்கியமாகும்.

குழந்தைகளுக்கு வேண்டிய பெற்றோரின் கவனிப்பு நிறைவாகக் குழந்தைகளுக்கு கிடைப்பதில்லை என்பது இக்கால கணிப்பாகும்.

வளர்ந்துவரும் பிள்ளைகளுக்கும் பெற்றோருக்குமிடையே பெரிய இடைவெளி தோன்றிவருவதாக ஆய்வுகள் கூறுகின்றன.

இவ்விரிசலுக்குக் காரணம் அவர்கள் குழந்தைகளாக இருந்தபோது அவர்களுக்கு வேண்டிய போதுமான கவனிப்பு பெற்றோரிடம் இருந்து கிடைக்கவில்லை என்பதாகும்.

♦ சிறந்த பெற்றோராக இருப்பதற்கு வேண்டிய திறமைகள் என்ன என்பதை பெற்றோர்கள் கற்றுக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியமானதாகும்.



♦ குழந்தைச் செல்வங்களுடன் பெற்றோர் நேரம் செலவிடுவது அநேக பலன்களை அள்ளி வழங்குகினறது, என குடும்பநல உளவியலாளர் கூறுகின்றனர்.

♦ பிஞ்சுக் குழந்தையில் இருந்து அவர்களுடன் நேரம் செலவளித்து, அவர்களுக்கு நல்லதைக் கற்றுக்கொடுத்து வளர்த்தால் அவர்களுக்கு ஆரோக்கியமான வளர்ச்சி உண்டாகும்.

## அத்தான் செத்தான்!



கணவர் கூறுகிறார், என் மனைவி தங்கமானவள். மாதத்தொடக்கத்தில் சம்பளம் வாங்கி அதை அப்படியே அவள் கையில் கொடுக்கம்போது, அத்தான் - அத்தான் என்று தேன் ஒழுகப் பேசுவாள். ஆனால் 15 ஆம் திகதி ஆனபின் போடா வாடா என்று கத்துவாள். காசு இருந்தால் அவன் அத்தான். அது இல்லையேல் அவன் செத்தான்.

இன்றைய உலகம் ஒருவர் எத்தகையவர்? அவர் என்ன செய்தார் என்பதற்காக அல்ல. மாறாக அவரிடம் எவ்வளவு பணம் இருக்கிறது என்பதற்காகவே அவரை மதிக்கின்றது.

**நாம் உலகத்தாரைப்போல் வேடம் தரிக்காமல் கிறிஸ்துவிடம் இருந்த சிந்தையே எம்மிடமும் இருக்க வேண்டுமென செபிப்போம்.**

## ரசமும் சமரசமும்!



ஒருவர் தம் நண்பரிடம் என் வீட்டில் ஒரே பிரச்சனை. என் அம்மா ரசம் வைத்தால் என் மனைவிக்குப் பிடிப்பதில்லை. என் மனைவி ரசம் வைத்தால் என் அம்மாவுக்குப் பிடிப்பதில்லை. இவர்கள் இருவருக்கம் மத்தியில் நான் சமரசம் செய்கிறேன் என்றார்.

**இவ்வாறு நாமும் சமாதானத்தின் கருவியாக, இருவரை இணைக்கும் பாலமாக, பரிந்துரைக்கும் செப வீரராக வாழ்வோம்.**



**முடிவுகள் எடுப்பதில் விவேகமாக இருப்பதுபோல், அதைச் செயல்படுத்துவதிலும் விவேகமாயிரு!**

**வெற்றியைக் கண்டு மகிழ்வதுபோல், தோல்வியைக் கண்டு சோராதே!**





**கவலைகளை இயேசுவிடம் பகிர்ந்து கொள், அவரால் வரும் மகிழ்ச்சியைப் பிறரோடு பகிர்ந்துகொள்!**

**அளவுக்கு அதிகமாக மனிதனால் சேர்க்கமுடியும், ஆனால் அளவுக்கு உட்பட்டே அனுபவிக்க முடியும்!**





**வேதத்தை நீ சிந்திக்கும் போதெல்லாம், இறைவன் உன் உள்ளத்தைச் சந்திக்கிறார்!**







# தமிழுக்கு கிறித்தவர்கள் செய்த பங்களிப்பு

மாறுபட்டு வேறுபட்டு கூறுபட்டுகிடக்கின்ற மதங்கள் அனைத்தும் தமிழுக்கு வளம் ஊட்டியது தான் தமிழின் வளமான வளர்ச்சிக்கு காரணமாய் அமைந்துள்ளது. **"செந்த மிழ் உடல் சிவநெறி உயிர்"** என்பர். சிவ நெறியாளர்கள். திருமாலை வழிபடுபவர்கள் முந்து தமிழ் என்று தமிழை வாழ் த்துகின் றனர். சமண மதத்தவர்களோ தமிழுக்கு பல் துறைகளில் வளம் ஊட்டியவர்கள்.இதற்கு நால டியார் நல்ல சான்று. சமண முனிவர் இளங்கோ அடிகள் வழங்கிய நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் தமிழில் எழுந்த தலையாய காப்பியம். புவிக்கு புதுவழி காட்டிய புத்த மதமும் தமிழனின் வளர்த் திற்கு தம் பங்களிப்பைச் செய்துள்ளது. **"இசுலாம் எங்கள் நெறி இன்பத் தமிழ் எங்கள் மொழி"** என்று இயம்பிய நிலையில் இசுலாம் இனிய தமிழுக்கு வளம் ஊட்டியதை நாம் மறக்கவில்லை .கடவுள் கோட் பாட்டை மறுப்பவர்கள் கூட தமிழுக்கு ஆற்றிய பணியை நாம் புறப்பணிப்பதற்கு இல்லை.

இந்த வரிசையில் கிறித்தவம் பரப்பவந்த பல் நாடு சார்ந்த கிறித்தவத் தொண்டர்களின் பங்களிப்பு எம் நெஞ்சைத் தொடும் முறையில் அமைகிறது. கிறித்தவர்கள் தம் மதத்தைப் பரப்ப வந்தவர்கள். ஆனால் தமி ழில் முழ்கிய நிலையில்-ஆட்கொள் ளப்பட்ட நிலையில் தமிழ் கிறிஸ்தவத் தொண்டர் கள் ஆற்றிய பணிஅளவிடக்கரியது.

தமிழுக்கு வளம் ஊட்டிய மதங்களில் எது தலையா யது என கேள்வி எழுப்பின் விடை கூறுவது கடினம். பட்டிமன்றங்கள் நடாத் தியும் தீர்வு காணமுடியுமோ என்பது பெரும் கேள்வியேயாகும்.

விரிவான விளக்கம் தரவிருப்பினும் இடநெருக் கடியை நினைவில் கொண்டு சில அடிப்படை உண்மைகளை மட்டும் இங்கு நாம் விளக்க விரும்புகிறோம்.

முன்னே கூறப்பட்டதற்கு அமைய "செந்தமிழ் உடல் சிவநெறி உயிர்" என ஓங்கி ஒலிக் கும் தமிழர்கள் பலர் கோவில்களில் நடைபெறும் வழிபாட்டில் தமிழுக்கு எவ்வளவு தூரம் இடம் கொடுக்ககின்ர் என்ற கேள்வி எழுகின்ற போது நாம் வெட்கித் தலைகுனிகின்ற அளவிற்கு தமிழின் நிலைதாழ்ந் துள்ளது.

தமிழன் கட்டிய கோயிலில் தமிழனின் கட்டிடக் கலையையும் சிற்பத் திறனையும் ஒவி யத்திறனை யும் எடுத்துக் காட்டுகின்ற கோவில்களில் நியாய மான அளவு கூட தமிழுக்கு இடமில்லை என அறிந்து ஏங்குகின் றோம்.

தமிழுக்கு வாழ்வு கொடுத்த நால்வரில் ஞானசம் பந்தர் தன்னை 50 இடங்களுக்கு மேல் தன்னை தமிழ் ஞானசம்பந்தர் என்று சாற்றுகின்ற கூற்றுக்கள் எம் நெஞ்சைத் தொடுகின்றன.500 இடங்களுக்கு மேல் தமிழின் பெருமையைப் பற்றிப் பேசுகின்றார். எங்கே கடவுளைக் காணலாம் என்ற கேள்வியை எழுப்புகின்ற அவர் எங்கே தமிழின் நீரமை எங்கு பேசப்படு கின்றதோ அங்கு இறைவனைக் காண் கிறேன் என்கிறார்.

ஏழாம் நூற்றாண்டில் 81 ஆண்டுகள் வாழ்ந்த "திருநாவுக்கரசரோ தமிழோடு இசை பாட மறந் தறியேன் என்றும் உன் நாமம் என்நாவில் மறந்தறி யேன்" என்றும் பாடியுள்ளார்.8ம் துாற்றாண்டில் வாழ்ந்த சுந்தரரருக்கு இறைவன் இட்ட கட்டளை "நம்மை மண்மேல்

சொற்றமிழ் பாடுக" என்தேயாகும்.மேலும் அர்ச் சனை பாட்டே என்றும்இறைவன் வலியு றுத்திச் செல்கிறார்.

"ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கும் திருவா சகம்" தந்த மணிவாசகரோ "தண் ணார்தமிழ் அளிக்கும் தண்பாண்டி நாட்டான்" என்று இறை வனை இரஞ்சி நிற்பதோடு சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து பாடுக" என்றும் வற்புறுத்திச் செல்கிறார்.

சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து பாடாத நிலையில் நாம் ஆற்றும் செயல் குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடி குழிவிழும் நிலைக்கு நாம் தள்ளப்படுவோம் என்றும் எச்சரித்துள்ளார்..

ஞானசம்பந்தர் செந்தமிழை கொஞ்சும் தமிழ்என்றும் நாவுக்கரசரின் தமிழை கெஞ்சும் தமிழ் என்றும் இறைவனோடு தோழமை பூண்ட நம்பி ஆரூரனின் நற்தமிழை விஞ்சும் தமிழ் என்றும் வியந்து பேசும் தமிழன். "கோயிற் படிக்கட்டின் கீழ் நின்று தமிழ் மானத்தை வடிகட்டி வடமொழியை மந்திரம்" என்று உவக்கின்ற காட்சி எமக்கு கண்ணீரை வரிவிக்கின்ற காட்சியாகும்.தமிழ் கிறித்தவர்களின் சிந்தனையில் எற்பட்ட புரட்சி

மேல் நாட்டிலிருந்து வருகை தந்த கிறித்தவத் தொண்டர்கள் வீரமா முனிவராக இருக்கட்டும். முனைவர்

கால்ட்வெல்லாக இருக்கட்டும் முனைவர் ஜீயூ போப்பாக இருக்கட்டும் அவர்கள் தமிழுக்கு ஆற்றிய பணியை நினைக்கின்ற போது எம்மை மீறி கண்கள்கலங்குகின்றன.அன்னை மரியாள் புகழ் பாடும் வீரமா முனிவரின் தேம்பாவணி நூலோ தித்திக்கும் தமிழில் அமைந்துள்ளது.

போப் ஐயரின் திருவாசக் மொழி பெயர்ப்போ எம் ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கும் முறை யில் அமைகின்றது.முனைவர் கால்வெல் அவர்களின் திராவிட மொழிகளின் ஒப்புவமை. என்ற நூல் தமிழுக்கு பெருமை சேர்க்கும் ஒப்பற்ற நூலாக விளங்குகிறது. தமிழ்க் கிறித்தவப் பெருமக்களாகிய வேதநாயகம் பிள்ளை .வேதநாயகம் சாஸ்திரி .கிருஸ்ணபிள்ளை ஆகியோர் இயேசுவின் புகழை பாடுகின்ற பொழுது எம் மெய் சிலிர்கிறது. எம்மை மீறி எம் கண்களில் நீர் பெருகுகின்றது.

தமிழ் நாட்டிற்கும் ஈழத்திற்கும் கிறித்தவத் தொண்டர் கள் வருகை தந்த போது தம் வழிபாட்டை கிபுறு மொழியில் நடாத்தினார்கள்.பின்பு இதை இலத்தினில் நடாத்தினர். அதைத் தொடர்ந்து ஆங்கிலத்தில் **“our father in Heaven Thy kingdom come”** என்று ஆங்கிலத்தில் உச்சரித்தனர்.பின்பு காலப் போக்கில் **”பரமண்டலத்திலுள்ள பிதாவே எம்மை இரட்சித்தருளும்”** என்று வடமொழி கலந்த தமிழில் இயேசுவை வழிபட்டனர்.இருந்தாலும் காலம் கடந்த நிலையில் ஞானம் பெற்று தமிழகத்தில் வாழும் ஏனைய மதங்களை மிஞ்சுகின்ற முறையில் **”விண்ணுலகில் வீற்றிருக்கும் இறைவா எம்மைஆட் கொண்டருளும்”** என்று உள்ளது சிறத்தல் - அல்லது பரி நாம வளர்ச்சி அடிப்படையில் தமிழ் கிறித்தவர்களுடைய வழிபாடு அமைகின்றது.

**தமிழால் உலகாண்ட தனிநாயக அடிகளார் தரும் கருத்து**

தமிழால் உலகாண்ட தனிநாயக அடிகளார் தமிழைப் பற்றிக் குறிப்பிடுகையில் உலகின் ஒவ்வொரு மொழிக்கும் ஏதோ சிறப்புண்டு ஆனால் தமிழ் தான் பக்திக்குரிய மொழி என்று மொழிந்து சென்ற அடிகளாரின் கூற்று எம்மையும் உலகத்தை யும் வியப்பில் ஆழ்த்துகின்றது..

இதனை பின்வரும் முறையில் தமிழின் தனிச்சிறப் பினை அடிகளார் எடுத்துக் கூறுகிறார். “ஆங்கிலத்தை வாணிபத்தின் மொழி என்றால் பிரஞ் தூதின் மொழியாகும்.. இலத்தீன் சட்டத்தின் மொழி என்றால் சொ்மன் தத்துவத்தின் மொழியாகும். இத்தாலி காதல் மொழி என்றால் தழிழே பக்தியின் மொழியாகும். “தமிழில் இரங்குவது போல வேறு எந்த மொழியிலும் இரங்க முடியாது”.என்பது தனிநாயக அடிகளாரின் முடிந்த முடிவு. இதனை ஆங்கிலத்தில் பின்வருமாறு கூறுவார்

“if Latin is the Language of Law and of Medicine

French the Language of the Diplomacy German the Language of Science And English the Language of Commerce Then Tamil is the Language of Bhakthi

The devotion to the Sacred and the holy”தமிழனின் விடுதலை வேட்கை என்று வருகின்ற போது கூட தட்டுங்கள் திறக்கப்படும் கேளுங்கள் கொடுக்கப்படும் என்று விவிலியம் விளம்பிய கருத்துக்கு அமைய உலக நாடுகளின் கதவுகளைத் தட்டி தமிழ் மக்களின் விடுதலைக்காக கிறித்ததவக் குருமார்கள் ஆற்றுகின்ற பணி வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்படுவதுஉறுதி.குறிப்பாக முன்னாள் மன்னார் பேராயர் இராயப்பு ஜோசப் அடிகளார் ஆற்றிய பணியை உலகமே தலை தாழ்த்தி வணங்குகிறது. இக்கட்டுரையின் தலைப்பில் குறிப்பிட்டதற்கு அமைய தமிழின் வளத்துக்கும் தமிழனின் வாழ்வுக்கும் தமிழ் கிறித்தவத் தொண்டர்கள் ஆற்றிய பணியை உலகம் வாழ்த்தி வணங்குவது உறுதி

**மா.க .ஈழவேந்தன் முன்னாள் நாடாளமன்ற உறுப்பினர்**

# பரிசுத்த ஆவிக்கு செபம்

எனக்கு ஒளியாயிருந்து உன்னத நிலையை நான் அடைய வழிகாட்டும் பரிசுத்த ஆவியே உமது திருநாமம் அர்சிசிக்கப்படுவதாக. உமது அருட் கொடைகளின் மூலம் என்னுள்ளத்தைப் பக்குவப டுத்தி எனக்கு தீங்கு செய்தோரை நான் மன்னிக்க அருள்புரிபவரே என் வாழ்வில் எச்சந்தர்ப்பத்திலும் எனக்கு உற்ற துணையான உமக்கு இச்சிறிய ஜெயத்தின் மூலம் நீர் செய்யும் சகலத்திற்கும் நன்றி கூறுகின்றேன். என் தேவைகள் எவ்வளவு முக் கியமாக இருப்பினும் எக்காரணம் கொண்டும் உம்மிலிருந்து விலகாமல் என்றும் உம்மில் நிலைத் திருப்பேனென உறுதி கூறுகிறேன்.நானும் என்னால் நேசிக்கப்படும் அனைவரும் என்றென்றும் உமது முடிவில்லா மகிமையில் பங்கு பெற வேண்டுகிறேன்.

ஆமென்.

உங்கள் தேவைகளின் எவ்வளவு கடினமாய் இருப்பினும் அடுத்தடுத்த 3 நாட்களுக்கு இச் ஜெபத்தை உங்கள் தேவையைக் கேளாமல் சொல்லிவரின் உங்கள் தேவை நிறைவேறும்.

# நம்பிக்கைக்குரிய ஊழியனாய் இருப்போம்

*பார்ந்த நண்பர்களே!*

ஓர் ஊரில் பண்ணையார் ஒருவர் இருந்தார். அவர் தன்னுடைய ஊரிலிருந்து பக்கத்து ஊருக்கு குதிரைவண்டியில் வேலை விசயமாகப் போய்க்கொண்டிருந்தார். அவருக்குத் துணையாக அவருடைய வீட்டில் வேலைபார்த்த வீட்டு வேலைக்காரனும் அவரோடு பயணம் சய்தான்.

வீட்டு வேலைக்காரன் வேலைக்கு புதிது. காஞ்சம் முட்டாளும்கூட. எப்போது பார்த்தாலும் வளவளவெனப் பேசுபவன். பண்ணையார் அவனுடைய பேச்சைக் கேட்டு வறுத்துப்போய் “வாயை மூடு” என்று சால்லிவிட்டு தூங்கிவிட்டார். சிறுதுநேரத்தில் தூக்கத்திலிருந்து விழித்தெழுந்த பண்ணையார் வற்றிலைப் பட்டியைத் தேடினார். அவர் எவ்வளவு தேடியும் வற்றிலைப் பட்டி கிடைக்காததால் வேலைக்காரனிடம், “ வற்றிலைப் பட்டி எங்கே ?” என்று கேட்டார். அவன், “அது விழுந்து நீண்டநேரம் ஆகிவிட்டது” என்று சால்ல, “நீ ஏன் அதை என்னிடம் சால்லவில்லை” என்று கோபத்தோடு கேட்டார். அதற்கு அவன் மிகவும் சாதாரணமாக “நீங்கள்தான் என்னை வாயை மூடு என்று சால்லிவிட்டீர்களே, பின் எப்படி நான் வாயைத் திறப்பது” என்றான்.

உடனே பண்ணையார் அவனிடம், “இனிமேல் நீ வண்டியிலிருந்து எது விழுந்தாலும் அதை உடனே எடுத்து உள்ளே போடு” என்று உத்தரவிட்டுவிட்டு மீண்டுமாகத் தூங்கிவிட்டார். வண்டி சிறிதுதூரம் எந்தவொரு இடைஞ்சலும் இன்றிச்சென்றது. ஓரிடத்தில் குதிரை சாணம் போடவே, குதிரைச் சாணமும் வண்டியிலிருக்கும் ஒரு பாருள்தான் என நினைத்துக்கொண்டு, கீழே இறங்கி குதிரைச் சாணத்தை எடுத்து வண்டிக்குள் போட, அது தூங்கிக்கொண்டிருந்த பண்ணையார் மீது பட்டது. அவர் என்ன நடக்கிறது என்று சய்வதறியாமல் ஒரு நிமிடம் திகைத்துப்போய் நின்றார். பின்னர் தன்மீது விழுந்த குதிரைச் சாணத்தைத் துடைத்துவிட்டு, ஒரு சிறு காகிதத்தை எடுத்து, அதில் என் னன்ன பாருட்கள் விழுந்தால் எடுக்கவேண்டும், என் னன்ன பாருட்கள் விழுந்தால் எடுக்கக்கூடாது என்று ஒரு பட்டியலைத் தயார்செய்து, அதை வேலைக்காரனிடம் காடுத்துவிட்டு, மறுபடியும் தூங்கிவிட்டார்.

இப்போது குதிரைவண்டி நன்றாகப் போய் காண்டிருந்தது. பண்ணையாரும் கண்ணயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தார். திடிரெண்டு வண்டி ஒரு பள்ளத்தில் இறங்க, தூக்கிகொண்டிருந்த பண்ணையார் தாப்பென்று கீழே விழுந்தார். உடனே அவன் பண்ணையார் எழுதிக் காடுத்த பட்டியலைப் பார்த்தான். அதில் பண்ணையாரின் பயர் குறிப்பிடப்படாததால், அவரை அப்படியே விட்டுவிட்டு பயணத்தைத் தாடர்ந்தான்.

முட்டாள்தனமான, பாறுப்பற்ற பணியாளர்களை தன்னோடு வைத்திருக்கும் எவருக்கும் ஆபத்துதான் மிஞ்சும் என்பதை இக்கதையானது நமக்கு எடுத்துக்கூறுகிறது.

பாதுக்காலத்தின் பத்தொன்பதாம் ஞாயிறான இன்று நாம் படிக்கக்கேட்ட வாசகங்கள் ‘நம்பிக்கையுள்ள பணியாளர்களாக வாழ’ நம்மை அழைக்கின்றது. இன்றைக்கு மனிதர்கள் தங்களுக்குக் காடுக்கப்பட்ட கடமைகளில், பாறுப்புகளில் நம்பிக்கைக்கு பாத்திரமாக இல்லாமல், ஏனோதானோ என்று இருக்கும் வேளையில், நாம் கடவுளுக்கும், கடவுளின் சாயலாகப் படைக்கப்பட்ட மனிதர்களுக்கும் நம்பிக்கைக் குரியவர்களாக வாழவேண்டும் என்பதுதான் இன்றைய வாசகங்களின் சாரம்சமாக இருக்கின்றது.

நற்செய்தி வாசகத்தில் ஆண்டவர் இயேசு நம்பிக்கைக்குரிய பணியாளர் யார்? என்று

கேட்டுவிட்டு, அவரே அதற் ான பதிலைத் தருகி றார். நம்பிக்கைக்குரிய பணியாளர் என்பவர் தன்னுடைய தலைவன் வருகிறபோது ஆயத் தமாக இருப்பவன்; தன் கடமைகளைச் சரியாகச் சய்பவன். எப்போதும் விழிப்பாய் இருப்பவன் அப்படிப்பட்டவனே நம்பிக்கைக்குரிய பணியா ளன். அவன் தலைவனின் பாராட்டை நிச்சயம் பறுவான். அதே நேரத்தில் தலைவன் காடுத்த பாறுப்புகளில் பிரமாணிக்கமாக இல்லாமல், கடமை உணர்விலிருந்து தவறி, நம்பிக்கைக் குரியவரான இல்லையென்றால் அவன் கட்டாயம் தலைவனிடமிருந்து தண்டனை யைத் பறுவான் என்கிறார் இயேசு.

நாம் கடவுள் நமக்குக் காடுத்த பாறுப்புகளில் எப்படி இருக்கிறோம்? என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். பல நேரங்களில் நாம் கடவுள்/இந்த உலகம் நமக்குக் காடுத்திருக்கும் பாறுப்புகளி லிருந்து (தந்தை, தாய், மகன், மகள் ஆசிரியர், அரசு அலுவலர் இன்னபிற பாறுப்புகள்) தவறி, தான்தோன்றிதனமாக வாழ்ந்துகொண்டிருக் கிறோம். இந்த நிலை மாறாவேண்டும், நாம் ஒவ்வொருவரும் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கவேண்டும்.

இன்றைய இரண்டாம் வாசகம் நம்பிக்கைக் குரிய ஒரு மனிதரைக் குறித்துப் பேசுகிறது. அம்மனிதர் வேறு யாருமல்ல, நம்முடைய முதுபெரும் தந்தையும், நம்பிக்கைக்கு எடுத்துக்காட்டாக இருக்கக்கூடிய ஆபிரகாமே. ஆபிரகாம், கடவுள் தன்னை அழைத்தபோது, தான் எங்கு போகிறோம் என்று தரியாமலே, கடவுளின் வார்த்தைக்குக் ீழ்படிந்து, அவர் காட்டிய நாட்டுக்குச் சன்றார். அடுத்து, தான் முதிர்ந்த வயதினராக இருந்தபோதும், தன்னு டைய மனைவி கருவுற இயலாதவராக இருந்த போதும், 'உன் மரபை கடற்கரை மணலைப் போலப் பருகச் சய்வேன்' என்ற கடவுளின் வார்த்தையை நம்பினார். இவ்வாறு அவர் கடவுளுக்கு நம்பிக்கைக்குரியவாரக இருந்தார். அதனால் கடவுள் அவருடைய வழிமரபை, கடற்கரை மணலைப் போலவும், வானத்து விண்மீன்கள் போலவும் பருகச் சய்தார். நாமும் கடவுளுக்கு நம்பிக்கைக்குரியவர்களாக வாழும்போது, கடவுள் நம்மை நிறைவாக ஆசிர்வதிப்பார் என்பதே ஆபிரகாமின் வாழ்க்கை நமக்கு எடுத்துக்கூறுகிறது.

ஒருமுறை நப்போலியன் தன்னுடைய படை வீரர்களோடு எதிரி நாட்டின்மீது போர்தொடுத் துக் காண்டிருக்கும்போது, எதிர்பாராத விதமாக எங்கிருந்தோ வந்த தோட்டா (Bullet) ஒன்று படைவீரன் ஒருவனின் மார்பில் பாய்ந் தது. அடுத்த நாடியில் அவன் வலி தாங் கமல் தரையில் சாய்ந்தான்.

போர் முடிந்தபிறகு அவனுடைய மார்பில் பாய்ந்த தோட்டாவை அப்புறப்படுத்தும் சிகிச் சையானது நடைபெற்றது. மருத்துவர்கள் படை வீரனின் மார்பில் இருந்த தோட்டாவை எடுப் பதற்கு சற்று கடினமான சிகிச்சையில் ஈடுபட் டார்கள். அப்போது ஒரு மருத்துவர் அவனு டைய மார்பில் கத்தியை வேகமாக இறக்கிய போது படைவீரன், த்தியை மதுவாக இறக் குங்கள், ஏனென்றால் என்னுடைய இதயத்தில் மன்னன் நப்போலியன் இருக்கிறான், அது அவனுக்கு வலிக்கப் போகிறது" என்றான். இதைக் கேட்ட அந்த மருத்துவர்கள், அரசருக்கு இப்படி யல்லாம் நம்பிக்கைக்குரிய படைவீரன் இருப்பானா!' என்று எண்ணி வியந்தார்கள்.

ஒரு சாதாரண படைவீரனே, தன்னுடைய அரசனுக்கு நம்பிக்கைக்குரியவனாக இருக்கும் போது, நாம் கடவுளுக்கு எந்தளவுக்கு நம்பிக் கைக்குரியவராக இருக்கவேண்டும் என்பதை நாம் சிந்தித்துப் பார்த்துக்கொள்ளவேண்டும். நாம் கடவுளுக்கு நம்பிக்கைக்குரியவராக இருக் கிறோமோ? இல்லையோ கடவுள், தான் காடுத்த வாக்குறுதிக்கு நம்பிக்கைக்குரிய வராக இருக்கின்றார் (1 காரிந்தியர் 1:9).

அடுத்ததா , கடவுள் நமக்குக் காடுத்திருக்கும் பாறுப்புகளில் நம்பிக்கைக்குரியவராக இருக் கும்போது நாம் எத்தகைய ஆசிர்வாதத்தைப் பறுகிறோம் என்பதை இன்றைய முதல் வாசகமானது நமக்கு எடுத்துரைக்கிறது. சீராக்

கின் ஞான நூலிலிருந்து எடுக்கப்பட்ட முதல் வாசகத்தில், “நீதிமான்கள் மீட்பையும், அவர்களுடைய பகைவர்களின் அழிவையும் உம் மக்கள் எதிர்பார்த்துக் காண்டிருந்தார்கள்” என்று படிக்கின்றோம்.

இங்கே சால்லப்படும் ‘நீதிமான்கள்’ என்பவர்களை நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருப்பவர்களாகப், பாறுப்புணர்வோடு இருப்பவர்களாகப் பாருள் எடுத்துக்கொள்ளலாம். நம்பிக்கைக் குரியவர்களும், பாறுப்புணர்வோடு இருப்பவர்களும்தான் நீதிமான்களாக இருக் முடியும் என்பது இவன் கூற விரும்பும் உண்மை. இன்றைக்கு நம்மிடத்தில் கடவுள் எதிர்ப்பார்க்கும் அத்தகைய பிரமாணிக்கமும், பாறுப்புணர்வும் இருக்கிறதா? என்று சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

ஒருமுறை நோபல்பரிசு பற்ற சர்.சி.வி.ராமன் நேர்முகத் தேர்வு நடத்தினார். அவர் நடத்திய நேர்முகத் தேர்வுக்கு பல இளைஞர்கள் வந்திருந்தனர்.

ஓர் இளைஞன் நேர்முகத் தேர்வு நடந்த அறைக்கு உள்ளே நுழைந்தான். அவனைப் பார்த்த சர்.சி.வி.ராமன், அவனிடம் பளதிகம் பற்றிய கேள்விகளைக் கேட்டார். அவர் கேட்ட கேள்விகளுக்கு பதில் தரியாது அந்த இளைஞன் விழிபிதுங்கி நின்றான். இதைப் பார்த்தவர் அவனிடம், “உனக்குப் பளதிகம் பற்றிய அடிப்படை உண்மைகள் கூடத் தரியவில்லை. அதனால் உன்னை வேலையில் சேர்த்துக்கொள்ள முடியாது” என்று சால்லி அனுப்பிவிட்டார்.

அவனும் முகவாட்டத்தோடு அந்த அறையை விட்டு நீங்கினான். அப்படி போகும்போது அவன் வாசல்பக்கமாக கிடந்த ஒரு குண்டூசியை எடுத்து, அதற்குரிய இடத்தில் போட்டுவிட்டுச் சன்றான். இதை தற்செயலாகக் கவனித்த சர்.சி.வி.ராமன் அவனை உள்ளே வரவழைத்தார். அப்போது அவர் அவனிடம், “உனக்கு பளதிகம் பற்றிய அடிப்படை உண்மைகள் தரியாமல் இருக் லாம். ஆனால், எப்படி பாறுப்புடன் நடந்துகொள்வது என்பதுபற்றி நீ நன்றாகவே தரிந்து வைத்திருக்கிறாய். அதனால் நான் உன்னை வேலையில் சேர்த்துக் காள்கிறேன்” என்றார்.

நாம் சிறுசிறு காரியங்களில் பாறுப்புள்ளவர்களா இருக்கும்போது, அதற்கு பலன் நிச்சயம் உண்டு என்ற உண்மையை இந்த நிகழ்வானது நமக்கு அருமையா எடுத்துக்கூறுகிறது. ஆகவே, நாம் பரிய பாறுப்புகளில்தான் நம்பிக்கைக்குரியவர்களாக, பாறுப்புள்ளவர்களாக இருக்கவேண்டும் என்றில்லை. சிறிய பாறுப்புகளிலும் நம்பிக்கைக்குரியவர்களாக இருக்கலாம்.

மத்தேயு நற்செய்தி 25:23 ல் வாசிக்கின்றோம், “நன்று, நன்று, நம்பிக்கைக்குரிய நல்ல பணியாளனே, சிறிய பாறுப்புகளில் நீ நம்பிக்கைக் குரியவனா இருந்தாய், எனவே பாறுப்புகளில் உன்னை அமைத்துவேன். உன் தலைவனாகிய என்னுடைய மகிழ்ச்சியில் பங்கு ாள்ளும்” என்று. நாம் நம்முடைய வாழ்வில் நமக்குக் காடுக்கப்பட்ட பாறுப்புகளில் நம்பிக்கைக் குரியவாராக இருந்தோம் என்றால், கடவுளிடமிருந்து நாம் பரும் வகுமதி அளவிட முடியாதது. எப்படி இறைவன் ஆபிரகாமை ஆசிர்வதித்தாரோ, அதைப் போன்று நம்மையும் ஆசிர்வதிப்பார்.

எனவே, நம்பிக்கைக்குரிய கடவுளுக்கு நம்பிக்கைக்குரிய மக்களாக வாழ்வோம். அதன் வழியாக இறைவன் அளிக்கும் முடிவில்லா வாழ்வைக் காடையாகக் பறுவோம். – Fr. Maria Antonyraj, Palayamkottai.

ஆண்டவரே, எழுந்தருளும்! இறைவா உமது ஆற்றலை வெளிப்படுத்தும்! எளியோரை மறந்துவிடாதேயும். பொல்லார் கடவுளைப் புறக்கனிப்பது ஏன்? அவர் தம்மை விசாரணை செய்ய மாட்டாரென்று அவர்கள் தமக்குள் சொல்லிகொள்வது ஏன்? ஆனால் உண்மையில் நீர் கவனிக்கின்றீர்: கேட்டடையும் துயரத்தையும் பார்த்து, உதவி செய்யக் காத்திருக்கின்றீர் திக்கற்றவர் தம்மை உம்மிடம் ஒப்படைக்கின்றனர் அனாதைக்கு நீரே துணை (திருப்பாடல் 10:12-13)

## STAY BLESSED....



Re/Max Hall of Fame Award Recipient

**KEN KIRUPA**

REAL ESTATE SALES REPRESENTATIVE

*Selling Lifestyles, Not Just Homes!*







416.830.8191

416homes.com | kenkirupa@gmail.com

203-1265 Morningside Ave, Toronto, ON. M1B 3V9 | P 416.287.2222 | F 416.282.4488

---



**RE/MAX ACE**

REALTY INC. BROKERAGE INDEPENDENTLY OWNED AND OPERATED

**VAHEESAN**

JEYAVEERASINGAM

Sales Representative

vaheesan@vaheesanhomes.com

vaheesanhomes.com

**Dir: 416 276-9999**




3-1286 Kennedy Rd,
Toronto,ON.
M1P 2L5
416.270.1111
416.270.7000

---



## Paul Healthy Life Clinic

### HOMEOPATHY & ACUPUNCTURE



**Paul Joseph,** B.H.M.S.(India), R.Ac., R.Hom(Canada)

*(Bachelor of Homeopathic Medicine and Surgery)*

**1193 Brimley Road, Scarborough, Ontario M1P 3G5**

**Tel: 416 438 3939 Cell: 416 986 4903 Fax: 416 438 3909**

www.newhealthcare.ca e-mail:drjp63@yahoo.com

---

**Siva Nagamany**

Sales Representative




Cell: **647-289-0091**

Off: **905-201-9977**

Fax: 905-201-9229

Email : home4sales@hotmail.com



**HOMELIFE/FUTURE REALTY INC.,** BROKERAGE*

7 Eastvale Dr, Unit #205, Markham, ON L3S 4N8

*Independently owned and operated

---

VIJAY SELVARAJAH, B.Com,CGA

Mortgage Agent

MortgageAlliance.Com/VijaySelvarajah




Access Inc.



vselvarajah@mortgagealliance.com

(416) 906-4222

209-8130 Sheppard Ave East, Toronto M1B 3W3

*Independently Owned and Operated Lic # : 11404

---



**Golda Muthurajah**

Sales Representative

**Cell: 647.708.7083**

golda.kana@gmail.com




HomeLife/Future

Realty Inc.,Brokerage,
Independently Owned And Operated

Bus : 905.201.9977

Fax: 905.201.9229

205-7 Eastvale Dr., Markham Ont. L3S 4N8

---



**Richard Alfred,** C.E.T

Real Estate Sales Representative

Direct:

**416-432-4322**



richard.alfred@century21.ca

www.century21.ca/richard.alfred






Tel: 416-298-8383 Fax: 416-298-8303

3-2250 Markham Rd. Toronto ON. M1B 2W4

Reach
Richard for 3R
Real Estate Needs



www.3rhomes.com

---

**RE/MAX ACE**

REALTY INC. BROKERAGE INDEPENDENTLY OWNED AND OPERATED

3-1286 Kennedy Rd. Toronto, ON M1P 2L5 YOUR PLACE

*"Your Dreams, My Mission"*



**SRI NADARAJASUNDRAM**

Sales Representative

**416-276-6666**

sri@remaxace.com

Tel: 416-270-1111

Fax: 416-270-7000